Regd. No. M. 3978. [விலை காலணா.

# “அம்ருதலஹரீ”

## கோயில் அநுபந்தம்

## “AMRUTALAHARI”—TEMPLE SUPPLEMENT.

நெ. 8 ] ஸ்ரீரங்கம், 25—2—1940. [ ஞாயிறு
ப்ரமாதி-௵ மாசி-மீ 13-உ

### ஸ்ரீரங்கநாதர் ப்ரதிபந்தம்!

அரசன் பெயர் புனைந்த ஒரு பத்ரிகையைப் பற்றி ஆரம்பத்திலேயே தெரிவித்திருக்கிறோம். அது நாலு வாரத்தில் நிலைக்க மாட்டாமல் ஸமாதானம் சொல்லக் கிளம்பிவிட்டது. இதற்குள்ளேயே அதன் வாசகர்கள் சலித்துவிட்டார்கள் போலும்! அல்லது தேவரஹஸ்யத்தை அறிந்தனர் போலும்! அதன் வெளியூர் வாசகர்கள் ஸ்ரீரங்கம் கோவில் விஷயம் அனாவசியம் என்று சொல்லுகிறார்களாம். இதற்காக ஸ்ரீரங்கம் விஷயமாகத் தனி ப்ரதிபந்தம் வெளியிட்டு விற்பனை செய்யப்போவதாக கம்பீரம் சொல்ல ஆரம்பித்திருக்கிறது. இதனால் இப்பொழுது முக்கியமாகத் தெரிவது யாதெனில்; தனக்கு ஸம்பந்தமில்லாததுடன் தன்னுடைய வாசகர்களும் வெறுக்கக்கூடிய நிலைமையில் விஷயங்களை எழுதுகின்றது என்பது ப்ரத்யக்ஷ நிரூபணமாய்விட்டதல்லவா? இனி வரவிருக்கும் தனி ப்ரதிபந்தமாவது எப்படி வருகின்றது என்பதைப் பிறகு பார்ப்போம். கோயிலில் நடக்கும் ஸகல மர்மங்களையும் நொடிப்பொழுதும் விடாமல் கவனித்து நிர்வாஹத்திலுள்ள அக்கிரமங்களையும் அநீதிகளையும் தாக்ஷிண்யமின்றி வெளியிட்டு வரும் நம்முடைய பத்ரிகை கோயில் அநுபந்தமாயிருக்கச் சற்றும் குறையில்லை. கோயில் நிர்வாஹத்திலுள்ள ஊழல்களை நாம் வெளியிட்டால் அதில் ஒன்றையாவது ஒழுங்கான முறையில் மறுக்க ஆண்மையில்லாமல் வீண் வசைமொழிகளால் விபரமறியாது

காகிதத்தை நிரப்பும் பத்ரிகை நமக்குப் ப்ரதியாகி, கோயிலுக்கும் ப்ரதியாகி கோயில் ப்ரதிபந்தம் என்ற பெயருக்கு முற்றிலும் அருகமாகும்.

நம்மைத் திட்டுவதால் நமக்கு ப்ரதிபந்தமான பத்ரிகை கோயிலுக்குப் ப்ரதிபந்தமாகும் விதம் எப்படியெனில் ;—

கோயில் பணமெல்லாம் தண்டச் செலவினாலும், ஆடம்பரச் செலவினாலும் கரைந்துபோயிற்றென்று நாம் கதறுகிறோம். இதை இன்னொரு பத்ரிகை கண்டிப்பது எப்படி? பணம் கரையவில்லை; இருக்கிறது—என்று சொல்லவேண்டும். அப்படிச்சொன்னால் தேவஸ்தான கடன்காரர்களுக்கு இப்பத்ரிகைதான் ஜவாப்பு சொல்லநேரிடும். இதற்காக செலவானதெல்லாம் நியாயமே என்று இப்பத்ரிகை சாதிக்க வேண்டும். அனாவசியமாகச் செலவு செய்து கோயில் திண்டாட்டத்திலிருக்கையில் செலவானதெல்லாம் நியாயமே என்று சொல்லும் பத்ரிகை கோயிலுக்கு விரோதமாகி கோயில் ப்ரதிபந்தமாகக் குறையில்லை. ஆயினும்

## ப்ரதிபந்தமும் நமக்கு அநுபந்தமே!

மேலும் இப்பத்ரிகை நமக்கு விரோதியாகக் கிளம்பி, நமக்காகக் கோயிலில் நடக்கும் தவறுதல்களை நியாயமென்று சாதிக்கும் வியாஜமாகவாவது சில ரஹஸ்யங்களை வெளியிடக்கூடும். மரியாதையினாலோ, தயையினாலோ, ஒரு கட்டுப்பாட்டினாலோ, நாம் வெளியிடாமல் இதுகாறும் வெகு மர்மமாக மறைத்து வைத்திருக்கும் பல நிர்வாஹ ஊழல்கள் அநுபந்தம் எனக் கூறிக்கொள்ளும் இப்ப்ரதிபந்தத்தின் மூலமாகவே வெளியாகி நம் ப்ரதிபந்தியும் நம் நோக்கத்தின்படியே நாம் செய்யவேண் காரியத்தைச் செய்யும் ஒரு நல்ல நண்பராவார். உண்மையில்

## ஒரு பத்ரிகை போதாதல்லவா!

கோயிலுக்கென்று ஒரு தனிப் பத்ரிகை இல்லாமலிருந்தது. நாம் பூராவும் கோயில் நிர்வாஹத்தைப் பற்றியே வெளியிடலானோம். நம்மைத் திட்டுவதற்கே ஊக்கம் கொண்ட அற்பப் பத்திரிகை கோயிலுக்காக ஒரு தனிப் பத்ரிகையையும் உண்டாக்கப் போகிறதாம். இப்படிப் பல பத்ரிகைகள் உண்டானால் கோயில்



அதிகாரிக்குப் பல நிர்ப்பந்தங்கள் ஏற்பட்டு நிர்வாஹமாவது ஒழுங்காக நடக்குமல்லவா!

## கடன் வாங்கும் காலம்.

சுமார் 15 வருஷத்துக்கு முன் ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்தின் நிலைமை எப்படியிருந்ததென்றால் :—அன்றாடம் வேண்டிய அரிசி பருப்பு சாமான்களைத் திருச்சி, மளிகை வியாபாரம் மஹா தர்மிஷ்டரான ஸ்ரீமான் கந்தசாமி சேர்வையவர்கள் லாபமில்லாமலும், வட்டியில்லாமலும் சரக்குகளைக் கடனாகக்கொடுத்து, தேவஸ்தானத்தார் கொடுத்தபோது பணம் வாங்கிக்கொண்டார். நோடிபிகேஷன் ஆகி 22-ம் மாஸத்தில் உத்ஸவத்துக்காக ஏற்பட்ட மூலதனத்தை இண்டெம்னிடி பாண்டு எழுதிக்கொடுத்து வேறு செலவுக்கு எடுத்துக்கொள்ளும் காலம் நேர்ந்துவிட்டது. இவ்வளவுக்கும் என்ன காரணம்? — ஆளில்லாக்காட்டில் ஆனை புகுந்தாற்போல் அவசியம் அநாவசியம் ஆலோசியாமல் மராமத்து செய்தது மாத்திரமல்ல; ஆபீஸர் அவர்கள் தம்மைக் கணக்கு வழக்குப் பார்க்கும் ஒரு வேலைக்காரராக நினையாமல், அலவன்ஸ், புது ஆபீஸ் கட்டிடம், அதற்குள் தமக்குத் தனியாக ஒரு அறை, அதற்குள் டெலிபோன், தாம் செய்யவேண்டிய வேலையைத் தமக்குச் செய்துகொடுக்க போர்டிலிருந்து அதிகச்சம்பளத்தில் ஒரு மானேஜர், பர்ஸனல் க்ளார்க் முதலிய காலாட்படைகள்—இப்படியான ஆடம்பரச் செலவுதான் காரணம். சம்பளம் கொடுக்கக் கூட பணமில்லாத நிலைமையிலும் இந்த ஆடம்பரச்செலவு நடப்பதைப் பார்த்தால் கூடிய சீக்கிரம் மறுபடியும் கடனுக்கு அரிசி பருப்பு வாங்கும் காலம் சமீபித்து விடும்போலிருக்கிறது.

## திவானுடன் போடோ.

ஸசிவோத்தமர் ஸர். ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் 10-2-40உ ராத்திரி கோயிலுக்கு வந்தார். அப்பொழுது சுமார் 7 மணி இருக்கலாம். தேவஸ்தானம் ஆபீஸில் குமாஸ்தாக்கள் மேஜைகளை ஓரமாக ஒதுக்கி இடத்தைக் காலிசெய்து ஆபீஸரின் சேம்பருக்கருகில் நாற்காலிகளைப்போட்டு பிளாஷ் லைட் என்னும் சோதி வெள்ளத்தை ஆபீஸ் முழுவதும் எலெக்ட்ரிஸிடியினால் பரப்பிக்கொண்டிருந்தார்கள். இவர்களுக்குத் தலைவராக விளங்கினார்

ஒரு போடோகிருபர். ஆபீஸ் இப்படிச் சோதி வெள்ளமாய் சுபாரானவுடன் ஆபீஸர் ஸ்ரீமான் ராஜகோபால நாயுடு காரு ஸ்ரீ. வி. பி. ராமஸாமி அய்யரையும், ஸ்ரீ. தேசிகாசாரியாரையும், அழைத்துக்கொண்டு ஆபீஸில் வந்து அவர்களை வைத்துத் தாமும் உட்கார்ந்து அந்தச் சோதி வெள்ளத்தில் போடோ எடுத்துக்கொண்டார். இருட்டிவிட்டபடியால் சோதி வெள்ளம் நிறைந்து இப்படிப் போடோ எடுக்கும் வீர தீர பராக்ரமச் செயலைச் சற்று அப்பாலிருந்து கவனித்த நமக்கு, ஆபீஸர் இருவருக்கும் நடுவில் உட்கார்ந்தாரா, அல்லது யாரேனும் ஒருவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தாரா, என்று மட்டும் தெரியவில்லை— ராயகோபுரம் கட்டின ராஜா தன் ப்ரதிமையை அங்கு வைக்கவில்லை; தன் பெயரைக்கூட ஒரு மூலையில் எழுதிவைக்கவில்லை. கிளி மண்டபத்திலிருந்த பழைய நாயக ராஜாக்களின் சித்திரங்கள் சுண்ணாம்புக்கிரையாயின. நாச்சியார் கோயில் தென்புறம் சுவரிலுள்ள நாயக ராஜாக்களின் சித்திரங்களின் கதி யாதாமோ? ஆபீஸர் திவானோடு போடோ எடுத்துக்கொண்டு தேவஸ்தானத்தில் பல விடங்களிலும் விளங்குகிறாராம். இதெல்லாம் தேவஸ்தானச்செலவா? சொந்தச்செலவா? சொந்தச்செலவாயிருந்தால் இத்தனை செலவாளியான ஆபீஸர் தம்முடைய கார் அலவன்ஸையும் சொந்தச்செலவிலேயே வைத்துக்கொள்ளலாம். மாஸம் ரூ 60 கார் அலவன்ஸ் வீண் செலவுதானே! போடோ தேவஸ்தானம் செலவாயிருந்தால் தேவஸ்தானம் இம்மாதிரியான செலவினால் சீக்கிரத்தில் கடன் வாங்க நேரிடும். ஒருவேளை ஹிந்து, மெயில் பத்திரிகைக்காரர்கள் இந்த ஆபீஸரும் திவானும் தேசிகாச்சாரியாரும் சேர்ந்த அபூர்வமான சேர்க்கையைத் தம்முடைய செலவில் போடோ எடுத்திருக்கலாமென்றாலும், 14 நாளாகியும் இன்னும் அவர்களுடைய பத்திரிகையில் இந்த போடோ வெளியானதாகத் தெரியவில்லை.

## ஆபீஸரும் பரிவாரமும் தெப்பமாடினர்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை இரவு பெருமாளும் நாச்சிமார்களுமாகத் தெப்பமாடினார்கள். திங்கட்கிழமை உதயம் ஆபீஸர் தம்முடைய பரிவாரங்களான ஆபீஸ் சிப்பந்திகளை அழைத்துக் கொண்டுபோய் தெப்பத்தில் தாமும் அவர்களுமாக வீற்றிருந்து



தெப்பமாடி போடோ எடுத்துக்கொண்டார். கோயிலுக்குப் பெருமாளை ஸேவிக்கவந்த திருவாங்கூர் திவான் ஸசிவோத்தமர் ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யரோடு இரவில் உட்கார்ந்து போடோ எடுத்துக்கொண்ட ஆபீஸர் ஆயிரக்கணக்கான ரூபாய் செலவுசெய்து பண்ணின பங்களா தெப்பத்தில் தானும் தன்னை அண்டியிருக்கும் பரிவாரங்களுமாக போடோ எடுத்துக்கொள்ளாமலிருக்கலாமா? ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தன் உத்தியோக ஸம்பந்தமாக தன்னை போடோ எடுத்துக்கொள்வது, தன் உத்தியோகத்தை அதிகமாக ஆடம்பரம் செய்துகொள்வது— இவைதான் முக்கியமாயிருக்கிறது.

## தெப்ப வேலையில் ஓர் விசேஷம்!

மராமத்து வேலையிலும் சரி; மற்ற வேலையிலும் சரி; மிகுந்த உத்ஸாஹம் வாய்ந்த நம்முடைய எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் தயாரித்த புதுத் தெப்பத்துக்கு சென்ற வருஷத்தில் சுமார் ரூ. 1500-ம் இவ்வருஷம் சுமார் ரூ. 1500-ம் ஆக சுமார் ரூ. 3000-ம் செலவாயிருக்கலாமென்று தெரிகிறது. இத்தனை செலவாகியும் தெப்பத்தில் அடுத்த வருஷத்துக்காக இன்னும் வேலை பாக்கியிருப்பது போலவே நமக்குத் தோன்றுகிறது. மேல் கொடுங்கை பலவிடங்களில் சரியாகச் சேராமல் முன்னும் பின்னுமாயும் மேலும் கீழுமாயும் சந்து தெரிகிறது. இது தவிர, சமயபுரம் கோயில் தெப்பத்தினுடைய பல சாமான்கள் சேர்ந்து தெப்பம் பூர்த்தியாயிருக்கிறது. இந்தப் புது தெப்பத்தைப் பிரதி வருஷமும் பூட்டவும் பிரிக்கவும் கூலி அதிகம் கொடுக்கவேண்டிவரும். அடிக்கடி வர்ணம் புதிதாகக் கொடுக்கவேண்டும். இவ்விரண்டு செலவும் இதற்கு முன் தெப்பம் கட்டுவதற்காக மட்டும் நெடுநாளாகக் கொடுத்துக் கொண்டிருந்த செலவுக்குச் சரியாகவிருக்கும். ஆகையால் ஆயிரக்கணக்காக பணம் செலவு செய்து, புதிதாக பங்களா தெப்பம் கட்டியும் செலவு குறையவில்லை. பணத்தைச் செலவு செய்த ஆபீஸராவது, இதற்கு அநுமதி அளித்த போர்டாராவது இதை கவனிக்கவில்லையே!

## மாசி மகம்.

மாசி மகம் ஆபீஸரின் தர்பாரில் சென்ற வருஷம் போலவே

நடந்தது. ஆபீஸருக்கு ஜயகாலம்; அவர் விரும்பினபடியே செய்யும் காலம் இது. கொள்ளிடத்தில் ஸ்ரீரங்கத்துத் துறையில் தீர்த்தம் ஸாதிக்க வரும் அன்பில் ஸ்ரீ ஸுந்தரராஜன், திருக்கரம்பனூர் ஸ்ரீ புருஷோத்தமன் இருவரும் தீர்த்தம் ஸாதித்த பிறகு தனித் தனியே பந்தலில் இருப்பார்கள். இப்படித் தனித்தனியாகவே இருக்கவேண்டிய பெருமாள்களை ஆபீஸர் ஸ்ரீரங்கம் எல்லைக்குள் கொண்டுவந்து ஒரே மண்டபத்தில் சேர்ந்தாற்போல உட்கார வைத்து திருமஞ்சனம் முதலியவற்றை நடத்தி சாயங்காலம் கொள்ளிடத்தில் தனித்தனி பந்தலுக்கு எழுந்தருளப்பண்ணினார்கள்; காவேரியிலும் ஒரே பந்தலில் இருவரையும் வைத்து விளையாட வேண்டுமென்று ஏனோ ஆபீஸருக்குத் தோன்றவில்லை! ஆபீஸர் தம்முடைய கோயில் அதிகாரத்தைக் கொண்டு கோயிலில் பொம்மை விளையாட்டுப் போல விளையாடுகிறாரேயன்றி முன் வழக்கங்களை யநுஸரிப்பதும் வரவு செலவைக் கவனிப்பதுமான உத்தியோகத்தைப் பார்ப்பதாகத் தெரியவில்லை.

## நிலாச் சாப்பாடு.

ஆபீஸர் இந்தக் கோயிலில் கால் வைத்து இது மூன்றாம் வருஷம். 1938-ம் வருஷம் மாசி மகத்தில் காஷியாயிருந்து தம்முடைய தர்மகர்த்தாக்களுக்கும் தேவஸ்தான குமாஸ்தாக்களுக்கும் நிலாச்சாப்பாடு போட்டார். சென்ற வருஷம் இவரே ஸர்வாதிகாரியாகையால் விசேஷமாக நடந்தது. இவ்வருஷமும் ஸர்வாதிகாரம் நடப்பதால் நிலாச் சாப்பாடு நடந்தது. இது தேவஸ்தானச் சில்வோ? ஆபீஸரின் சிலவோ? அல்லது ஆபீஸ குமாஸ்தாக்கள் எல்லாரும் சேர்ந்து ஒப்புக்கொண்டு நடத்திய விசிதாசாரச் சிலவோ? அல்லது இந்த அன்னதானத்துக்காக ததீயாராதனத்துக்காக என்று யாராவது ஒரு பணக்காரரிடமிருந்தோ அல்லது வியாபாரியினிடமிருந்தோ கிடைத்த சாமான்களோ? அல்லது இதுவரையில் நடந்த பல ஸமபுரோக்ஷணங்களில் ஏழைகளுக்கு அன்னதானமென்று வசூலித்த பணம், சாமான் இவற்றில் மிஞ்சினபாகமோ?

## அடையவளைந்தான் வீடு விற்பனை!

சுமார் பத்து வருஷங்களுக்கு முன் மணியம் குத்தகை எடுத்து நஷ்டப்பட்ட அய்யாஸாமிஐயங்கார் தேவஸ்தான பாக்கிக்காகக் கொடுத்த வீட்டை யாரோ அபேக்ஷிக்கிறதாகத் தெரிகிறது. பணமில்லாத முடைக்கு பாக்கியிலுள்ள தர்ம நிதியைக் கடன்



வாங்குவதை விட இருக்கும் சொத்தை விற்று பணத்தைச் செலவு செய்யலாம். ஆனால் ஒரு சொத்தை விற்று வேறு சொத்து வாங்க வேண்டுமென்று சட்டம். ஆகையால் ஜாக்கிரதை! வாங்குகிறவர்கள் ஆலோசியாமல் பணத்தை கொடுத்து விட்டால் இன்னொரு ஆபீஸரின் காலத்தில் தகராறு ஏற்படும்.

## மூன்றிலொன்று மோகினி கிடைத்தது.

மோஹினிப் பணம் மொத்தம் 35,000 ரூபாயில் லாலுகுடி தாலூகா 12,000 ரூபாய் வந்து விட்டதாகத் தெரிகிறது.

## தாமதத்திற்குக் காரணமென்ன?

பணமில்லாத முடையில் கடன் வாங்குவதைவிட வரவேண்டிய கடனை விரைவில் வசூலிக்கலாமே. இனும் மணியம் பார்க்கும் கிருஷ்ணையங்காரிடமிருந்து சென்ற வருஷப் பாக்கி ரூ. 1500/-யும் வசூலிக்கலாம். இது வசூலிக்கப்படாமலிருந்தால் தாமதிக்கக் காரணமென்னவோ?

## கோர்ட்டு நடவடிக்கைகள்.

கோயிலை கோடிபை செய்தது, தர்ம கர்த்தாக்களை வேலை பார்க்க விடாமலிருப்பது, எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் என்ற பெயருக்கேற்ப தர்ம கர்த்தாக்களின் தீர்மானப்படி எக்ஸிக்யூடிவ் வேலையைச் செய்ய வேண்டிய ஆபீஸரை ஸர்வாதிகாரியாக வைத்து கோயில் சொத்து முழுவதையும் அவாதீனமாக்கி யிருப்பது, இடையே ஒரு அட்வைஸரி கமிட்டியை ஸ்ருஷ்டித்தது—யாவும் செல்லாது; சட்ட விரோதம்—என்று ஸொஸைடீஷன டிரஸ்டிகளும் தர்மகர்த்தா ஸ்ரீ. நரஸிம்மய்யங்காரும் சேர்ந்து ஹைகோர்ட்டில் ஒரு பெரிய தாவா தாக்கல் செய்திருக்கிறார்கள். ஒரு இஞ்சங்ஷன் மனு தாக்கலாகி நோட்டீஸ் பிறந்து 1-3-40-ம் தேதியன்று வாயிதா போடப்பட்டிருக்கிறது.

* * *

ஸ்ரீரெங்கநாதஸ்வாமி கோயிலில் ரெங்கவிலாஸ மண்டபத்தின் மேல்புறம் க்ஷத்திரிய ராஜுக்கள் தண்ணீர் பந்தல் தர்மம் செய்ய அவர்களுக்கு பொதுவாய் வெகு நீண்ட காலமாய் கட்டிடம் வகையறா பாத்தியம் ஏற்பட்டு அதில் அவர்கள் பொதுஜன சௌகரியத்திற்காக ஒரு பிராம்மணரை சம்பளத்திற்கு நியமித்து ஸேவார்த்திகளுக்கு தாகவிடாய் தீரும்படி ஜலம் கொடுக்கும் தர்மம் செய்து வந்தார்கள். ஷை கோயிலில் முன்னிருந்த டிரஸ்டிகள் வகையறா ஷை கட்டிடத்தை ஆக்கிரமித்து எடுத்துக் கொண்டார்கள். அதனால் ஷை ராஜுக்கள் வகையறா அப்பொழுது

தேவஸ்தானத்தின் பேரில் ஸ்ரீ. டி. மு. கோ. O. S. 155/10 நெம்பராகவுள்ள தாவாவைச் செய்ய ஷை டிரஸ்டிகள் வகையறு ஸ்டேட்மெண்டு கொடுத்து நடவடிக்கை நடந்து வந்ததில் ஷை டிரஸ்டிகள் தாங்களாகவே ராஜியாக வந்து பேசி உபய வாதிகளும் விவரம் கண்டு ஷை நெம்பரில் கண்டிஷன் ராஜிநாமா செய்து கொண்டார்கள். ஷை ராஜிநாமா டிக்கிரியில் கண்ட ஜாகாக்களை பிரதிவாதிகளின் செலவில் ஷை ராஜாக்கள் ஷை கோர்ட்டு மூலமாய் சுவாதீனம் செய்து கொண்டு அதுகளில் ஒரு அறையும் முன்புறம் கருங்கல் திண்ணைப் படிக்கட்டும் கட்டி அதில் ஷை தண்ணீர்ப் பந்தல் தர்மம் நடத்தி வந்தார்கள். இப்படியிருக்க தற்காலம் ஷை கோயில் எக்ஸிக்யூடிவ் ஆபீஸராக வுள்ளவர் ஷை ராஜிநாமா டிக்கிரிக்கும் நோட்டீஸ் கரெஸ்பாண்டன்ஸுக்களுக்கும் விரோதமாய் 24—8—39-ல் ஷை திண்ணைப் படிக்கட்டை இடித்து விட்டாராம். அது விஷயமாய் ஷைராஜாக்களுக்காக ஸ்ரீ T.V. கோவிந்தராஜுலு ராஜா விவரங்கள் கண்டு ஷை ஆபீஸர் பேரில் தி. ஸப். மா. கோர்ட்டில் கொடுத்திருந்த பிராது நாளது 13—3—40-உ விசாரணைக்கு போட்டிருக்கிறதாகத் தெரிகிறது.

---

## ஸ்ரீரங்கம் நகர வாசிகளுக்கு

## புதிய வருஷப் பரிசு.

வந்து விட்டது ! வந்து விட்டது !!

இந்த வருஷம் ஜனவரி மாதம் விளைந்த புதிய உயர்ந்த குணமுள்ள அராபிகா காப்பிக் கொட்டைகள் குறைந்த விலைக்கு எங்களிடம் கிடைக்கும். நீலகிரி, மைசூர், குடகு மலைகளிலிருந்து புதிதாய் பயிர் செய்யப்பட்ட காப்பிக் கொட்டைகள் வந்து விட்டன. பழையதும், போலியும், சாயம் போடப்பட்டதுமான கொட்டைகளை வாங்கி ஏமாறாதீர்கள்.

நேரில் வருத்து அரைத்து உத்தரவாதம் செய்து கொடுக்கப்படும். எங்கள் காப்பித்தூளை வாங்கி உபயோகியுங்கள்.

அசல் சீயக்காய் பொடியும் கிடைக்கும்.

மைசூர் டிரேடிங் கம்பெனி,

கீழவாசல், ஸ்ரீரங்கம்.

---

*Edited, Printed and Published by Pandit S. M. Sundara-rajacharya the at Sri Vilasam Press, Srirangam.*

